Post without pre-payment Licence No. G 6 11[illegible] P 55

ANNA Leading Progressive Tamil Daily of the people

# பிரதமர் அடுத்த நடவடிக்கை என்ன ?

Regd No. TN - MS [C] 244 Phone: 420212 பக்கம் 4 விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 24 10 86 வெள்ளி வெளியூர் 25 10 86 சனி இதழ் 8

## மத்திய அமைச்சரவை மாற்றத்துக்குப்பின் தீவிர அரசு பணிக்கு ஏற்பாடு

புதுடெல்லி, அக். 24- மத்திய அமைச்சரவை மாற்றத்துக்குப்பின் அரசு பணிகள் தீவிரமாக நடைபெற பிரதமர் ஏற்பாடு செய்து வருகிறார். இலாகாக்களின் உயர் அதிகாரிகள் சிலரை மாற்றி பணிகள் தீவிரமடைய பிரதமர் முயற்சி செய்கிறார்.

பிரதமர் ராஜீவ்காந்தி கடந்த புதனன்று மத்திய அமைச்சரவையில் மாறுதல்களைச் செய்தார். 5 7 அமைச்சர்கள் நீக்கப்பட்டு அமைச்சர்கள் புதிதாகச் சேர்க்கப்பட்டனர்.

பதவி இழந்த அமைச்சர்களுக்கு வேறு புதிய பொறுப்புக்களை கொடுப்பது குறித்து பிரதமர் சிந்தித்து வருவதாக டெல்லி தகவல்கூறுகிறது.

மத்திய அமைச்சர் பதவியிலிருந்து விடுவிக்கப்பட்டவர்களின் செயல்களை பரிசீலித்து அந்தப் பொறுப்புக்கள் வழங்கப்படும் என்று 'இந்து' சிறப்புச் செய்தியாளர் கூறுகிறார்.

அனேகமாக மத்திய உயர் அதிகாரிகள் பலரும் மாற்றப்பட்டு அரசு பணிகள் தீவிரப்படுத்தப்பட இருக்கிறது.

உடனடியாக இல்லாவிட்டாலும் சிறிது நாள் சென்றாவது அதிகாரிகள் களையெடுப்பை நடத்த பிரதமர் முடிவு செய்துள்ளாராம்.

## ஜாம்பியா சுதந்திரதினம்: ஜைல்சிங் வாழ்த்து

புதுடெல்லி. அக். 24- ஜாம்பியாநாட்டின் 22-வது சுதந்திர தினத்தையொட்டி அந்தநாட்டு அதிபர் கென்னத்கவுடாவுக்கு ஜனாதிபதி ஜைல்சிங் வாழ்த்து செய்தி அனுப்பியுள்ளார்.

## அதிகாரி போல் நடித்து மோசடி

சென்னை, அக். 24- பெங்களூரைச் சேர்ந்த மார்ட்டின்என்கிறமோகன் என்ற வாலிபர் மத்திய குற்றப்பிரிவு போலீஸ் அதிகாரி என்று கூறி ரூபாய் 40 ஆயிரம் மோசடி செய்ததாக கைதுசெய்யப்பட்டார்.

ராயப்பேட்டை போலீசார் வாலிபரை கைது செய்து இது குறித்து விசாரித்து வருகிறார்.

இருக்கிற ரெண்டு முடியையும் ஏன் இப்படி பிடிங்கிக்கிறிங்க

இந்த ஒருவாரமா நாமத்தூண்டிவிட்டு நடத்திய மொழிப் போராட்டம் வீணா போச்சுடா!... அல்லாப் பேப்பர்லேயும் ராணி-பத்மினி கொலை மந்திரிகள் பதவிநீக்கம் இதான்டா எட்டுகாலம்! போச்சு! பணம் போச்சு!!

## கிராம பஞ்சாயத்து பாணியில் மக்கள் குறை கேட்ட முதல்வர் புரட்சித்தலைவர்

சென்னை, அக். 24- கழக நிறுவனத்தலைவரும் கழக பொதுச் செயலாளருமான முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று தலைமைக் கழகம் வந்தபோது ஏராளமானோர் மனுக்கள் தந்தனர்.

தலைமைக்கழகத்தில் கூடி அமர்ந்திருந்த கழகத்தொண்டர்கள் மற்றும் பொதுமக்களிடம் அமைதியாக கோரிக்கைகளை முதல்வர் புரட்சித் தலைவர் கேட்டார்.

தலைமைக் கழகத்தின் வாயிலில் உள்ள வராண்டா படியில் முதல்வர் புரட்சிததலைவர் உட்கார்ந்தார். பிறகு ஒவ்வொருவராக அழைத்து கோரிக்கை என்ன என்று பொறுமையாக கேட்டு அதற்குதக்க நடவடிக்கை எடுக்க வழி செய்தார்.

இந்த காட்சியை பார்க்கும் போது கிராமப்புறத்தில் ஊர் ஒன்று கூடி தலைவரிடம் முறையீடு செய்வது போல இருந்தது.

சுமார் ஒரு மணி நேரத்திற்கும் மேலாக முதல்வர் புரட்சித்தலைவர் குறைகளை கேட்டறிந்தார்.

பின்னர் முதல்வர் புரட்சித்தலைவர் அவர்களிடமிருந்து விடை பெற்று செல்லும் போது ''பொதுச் செயலாளர்புரட்சித்தலைவர் வாழ்க'', ''முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்க'' என்றவாழ்த்து முழக்கங்கள்எழுந்தன.

## 9 பேரை கொன்றவர் மீண்டும் அவசர அப்பீல்

சென்னை, அக். 24- ஒன்பது பேரை கோரமாகக் கொலை செய்து தூக்குத் தண்டனைப் பெற்ற ஜெயப்பிரகாஷ் மீண்டும் அப்பீல் செய்துள்ளான்.

சென்னை விருகம்பாக்கத்தில் தனது சகோதரி உட்பட 9 பேரை கொலை செய்தவன்ஜெயப்பிரகாஷ் 24-2-84ல் இந்த படுகொலைகள் நடந்தன.

இதையொட்டி ஜெயப்பிரகாஷுக்கு தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது.

இதை எதிர்த்து சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்தான். ஜெயப்பிரகாஷ். அப்பீல் மனு தள்ளுபடி செய்யப்பட்டது ஜனாதிபதிக்கு அனுப்பப்பட்ட கருணைமனுவும் தள்ளுபடி செய்யப்பட்டது.

இப்போது விசேஷ அவசர மனு ஒன்று சுப்ரீம் கோர்ட்டில் ஜெயப்பிரகாஷ் சார்பில் தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

கோவை மாவட்டத்தில் 8பேரை கொலை செய்ததாக தூக்குத் தண்டனை பெற்றமாகாளிநாடார்மற்றும் அவரது மகன்களுக்கு ஆயுள் தண்டனைவிதிக்கப்பட்டுள்ளது. அதே போன்ற வழக்குத்தான் இதுவும். எனவே ஜெயப்பிரகாசுக்கு விதிக்கப்பட்டுள்ள தூக்குத் தண்டனையை ஆயுள் தண்டனையாக மாற்ற வேண்டும் என்று அந்த விசேஷஅவசர மனுவில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த மனுவை வழக்கறிஞர்கள் எஸ்.கிருஷ்ணசாமி ரதிதேவி ஆகியோர் தாக்கல் செய்துள்ளனர். வரும் 28ந் தேதி இந்த மனு மீது விசாரணை நடைபெறுகிறது.

## தலைமைக் கழகத்தில் கழக தோண்டர்கள் ஆர்வம்

சென்னை, அக். 24- தலைமை கழக அலுவலகத்தில் இன்று காலை முதலே கழகத் தொண்டர்கள், தாய்மார்கள் புரட்சித் தலைவரின்வருகையை நோக்கி காத்திருந்தனர்.

முக்கிய அலுவல் காரணமாக முதல்வர் இன்று தலைமைக் கழகம் வரவில்லை.

கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா எம். பி. காத்திருந்த அனைவரையும் சந்தித்து அவர்கள் கொடுத்தமனுக்களைப் பெற்றுக் கொண்டார்.

அவர் 50 நிமிடங்கள் தொண்டர்கள் தந்த மனுக்களை பெற்றுக் கொண்டு புரட்சித் தலைவரிடம் கொடுத்து ஆவனசெய்வதாக உறுதியளித்தார்.

## பட்டாசுவெடித்ததால் விமான விபத்து

லாகூர், அக் 24- பாகிஸ்தான் அரசுக்கு சொந்தமான விமானம் ஒன்று விபத்துக்குள்ளானதில் 17 பேர் இறந்துள்ளனர் பட்டாசு வெடித்ததின் காரணமாக குறிப்பிட்ட இடத்தில் விமானத்தைஇறக்க முடியாததால் விபத்து நடந்துள்ளது.

### திருமண கோஷ்டி

பாகிஸ்தான் அராக்கு சொந்தமான விமானம் லாகூரிலிருந்து பெஷாவர் சென்றது. பெஷாவர் விமான தளத்தில் விமானம் இறங்க முயன்ற போது கல்யாண கோஷ்டி ஒன்று கொளுத்திய பட்டாசுகளால் விமானத்தை குறிப்பிட்ட இடத்தில் இறக்கமுடியாது விமானி திணறினார்.

விமான நிலைய அதிகாரிகள் வேறு இடத்தில் இறக்கும் படி விமானிக்கு உத்தரவிட்டனர்.

விமானத்தை விமானி தரை இறக்க முயன்ற போது விபத்துக்குள்ளனது. இதில் 17 பேர் இறந்தனர். இறந்தவர்களில் மூன்று பேர் குழந்தைகள்.

இந்த சம்பவம் குறித்து விசாரணைக்கு உத்தரவிடப்பட்டுள்ளது.

## தேஷ்பூர் ரயில் விபத்து:13 பேர் பலி

தேஷ்பூர், அக். 24- மத்திய பிரதேசமாநிலம் தேஷ்பூரில் இன்று ஏற்பட்ட ரயில் விபத்தில் 13 பேர் இறந்துள்ளனர்.

மத்திய பிரதேச மாநிலத்திலுள்ளது தேஷ்பூர். இந்த ரயில்நிலையத்துக்கு ஆமதாபாத், சபர்மதி எக்ஸ்பிரஸ் வந்துகொண்டிருந்தது. அப்போது அந்த ரயில் நிலையத்திலிருந்த சரக்கு போக்குவரத்து [illegible]கள்மீது மோதிசபர் [illegible]ரின் இரண்டு [illegible] தடம் புரண் [illegible]

[illegible]பவத்தில் 13பேர் இறந்தனர். 50பேர் படுகாய மடைந்து மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டுள்ளனர். சம்பவம் நடந்த இடத்திற்கு மருத்துவர் குழு விரைந்து சென்று சிகிச்சை அளித்துவருகிறது.

இந்த சம்பவம் பற்றி அறிந்ததும் மத்திய ரயில்வே துணை அமைச்சர் சிந்தியா சம்பவம் நடந்தஇடத்திற்குவிரைந்தார். விபத்தில் காயமடைந்தோருக்கு ஆறுதல் கூறினார். இறந்தவர்களின் குடும்பத்தினருக்கும் சிந்தியா ஆறுதல் கூறினார்.

## ரயில் மோதி ஒருவர் சாவு

சென்னை, அக். 24- சென்னை கோடம்பாக்கம் மகாலிங்கபுரத்தைச் சேர்ந்தவர் விஜயசர்மா, (வயது44) இவர் தனியார் கம்பெனி ஒன்றில் நிர்வாக அதிகாரியாக பணியாற்றி வந்தார்.

சென்னை விமான நிலையத்திற்குச் சென்றுவிட்டு திரிசூலம் ரயில் நிலையம் அருகே தண்டவாளத்தைக் கடந்த போது மின்சார ரயில் மோதி இறந்தார்,

இவருக்கு மனைவியும் 2குழந்தைகளும்உள்ளனர்.

விபத்து குறித்து ரெயில்வே போலீசார் விசாரித்து வருகிறார்கள்.

---

கழக நிறுவனத்தலைவரும் கழகப் பொதுச்செயலாளருமான இதயதெய்வம் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர்

# புரட்சித்தலைவர்

அவர்கள் வெளியிடும்

# முக்கிய அறிவிப்பு

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆணி வேர்களாக தமிழகம் முழுவதும் இயங்கி வரும் எம். ஜி. ஆர். மன்றங்களின் செயல்பாடுகள் பற்றி நேரில் அறிந்து வரவும் - இன்னும் சிறப்பான சேவைக்கும், வளர்ச்சிக்கும் மன்றத்தினர் கோண்டுள்ள எண்ணங்களையும், கருத்துக்களையும், சேகரித்து வரவும் எனது அன்புத்தம்பிகள்,

பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்
இராமநாதபுரம் மாவட்ட எம். ஜி, ஆர், மன்றத் தலைவர்
**திரு. பொ. அன்பழகன்** எம்.எல்.ஏ. அவர்கள்

மதுரை புறநகர் மாவட்டக் கழகச் செயலாளர்
**திரு. இரா. முத்தையா** எம்.எல்.ஏ. அவர்கள்

மதுரை மாநகர் மாவட்ட எம்.ஜி,ஆர், மன்றச் செயலாளர்
**திரு. சோ. நவநீதகிருஷ்ணன்** அவர்கள்

ஆகியமூவரும் எல்லா மாவட்டங்களுக்கும், வரும்25-10-86 முதல் சுற்றுப்பயணமாக வருகின்றனர். அவர்கள் சுற்றுப் பயணத்திற்கான முழு ஒத்துழைப்பினையும் வழங்குமாறு கழக-மன்ற உடன்பிறப்புக்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

எம். ஜி. இராமச்சந்திரன்

கழக நிறுவனத்தலைவர்-கழகப்பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்

சென்னை-14.
24-10-86.

## ரேஷனில் கூடுதல் சர்க்கரை

சென்னை, அக். 24

தமிழ் நாட்டிலுள்ள எல்லா குடும்ப அட்டைதாரர்களுக்கும்செப்டம்பர் மாதத்தில் 1கிலோ லெவி சர்க்கரையும் அக்டோபர் மாதத்தில் 1 கிலோலெவி சர்க்கரையும் கூடுதலாக வழங்கப்படும் இக்கூடுதல் சர்க்கரையை செப்டம்பர் மாதத்தில் பலர் வாங்கவில்லை என்று தெரிகிறது. அவ்வாறு வாங்காதவர்கள் 31.10.1986-க்குள் செப்டம்பர். அக்டோபர் மாதத்திற்குரிய சர்க்கரை மொத்தம் 2 கிலோ கூடுதல் சர்க்கரையை வாங்கிக் கொள்ளலாம். செப்டம்பர் மாதத்தில் கூடுதல் சர்க்கரையை ஏற்கெனவே வாங்கியவர்கள் அக்டோபர் மாதத்திற்கான ஒரு கிலோ கூடுதல் சர்க்கரை வாங்கிக் கொள்ளலாம்.

## சேலத்தில் ரூபாய். 16 கோடியில் புதிய அணைக்கட்டு

சேலம், அக். 24-

சேலம் மாவட்டத்தில் 16 கோடி ரூபாயில் புதிய அணைக்கட்டுகள் கட்டப்பட்டு வருகின்றன.

இதுகுறித்து மாவட்ட ஆட்சித்தலைவர் தங்கதுரை நிருபர்களிடம் கூறியதாவது:-

சேலம் மாவட்டத்தில் உள்ள கரியகோவில அணைக்கட்டு வேலைக்காக ரூபாய்8 கோடியே 39 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது தற்போது இப்பணி நடைபெற்று வருகிறது இதனால் 4 ஆயிரம் ஏக்கர் பயன்பெறும்.

இதேபோல் ஆனைமடுவு அணைக்கட்டுக்காகரூபாய 8கோடியே 59 லட்சத்தில் பணிகள் நடைபெற்று வருகின்றது-இதனால்5ஆயிரம் ஏககர் பயன்பெறும்.

மேலும் இம் மாவட்டத்தில் நலிந்தோர் நிதியுதவிக்காக ரூபாய் 87 கோடியே 17 லட்சம் ஒதுக் யதில் இதுவரை ரூபாய்72கோடி வழங்கப்பட்டுள்ளது சேலம் கோட்டை மாரியம்மன் கோவில் திருப்பணிக்காக அரசு ரூபாய் 2 லட்சத்து 30 ஆயிரம் மானியமாக கொடுத்துள்ளது இதே போன்று திருச்செங்கோடு அர்த்த நாரிஸ்வரர் கோவிலுக்கு மலைபாதை அமைக்க அரசு மானியமாக ரூபாய் 5 லட்சம் வழங்கியுள்ளது

இவ்வாறு கலெக்டர் தங்கதுரை பேட்டியின் போது தெரிவித்தார்.

## இராமநாதபுரத்தில் மரம் நடுவிழா

இராமநாதபுரம் அக்24

இராமநாதபுரம் மாவட்டம் உடைச்சியார் வலசை கிராமத்தில் இந்தியன் ஓவர்சீஸ்வங்கிபொன்விழாவையொட்டி மாவட்டம் முழுவதும் மரம் நடும் திட்டத்தினை இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் பெருமண்டல மேலாளர் சி. முத்தையா தலைமையில், ராமநாதபுரம் மாவட்ட ஆட்சியர் தேவேந்திரநாத் சாரங்கி, துவக்கி வைத்தார்.

## சதுரங்கப் போட்டியில் ரஷ்ய பெண் மாயா சாதனை

பாரஜோமி, அக் 24-

பெண்களுக்கான உலக சதுரங்க சாம்பியன் போட்டியில், நான்காம் தடவையும் சோவியத் யூனியனைச் சேர்ந்த மாயா சிபுர்தானிட்ஜே8-5பாய்ண்டுகளில் வெற்றி பெற்றார்; சோவியத் நாட்டைச் சேர்ந்த எலினா அக்மிலோவ்ஸ்காயாவை அவர் தோற்கடித்தார்

அவர் தமது 17 ஆம் வயதில் உலக சாம்பியன் பட்டம் பெற்றார்; முன் எப்போதும் கண்டிராத சாதனை இது. 1961 ஜனவரி 17ல், ஜார்ஜியா நகரமான குதாய்சியில் மாயா பிறந்தார். இப்போதுதிபிலிசியில் வாழ்கிறார்;மருத்துவக்கல்லூரியில் பயில்கிறார்.

கடந்த 15 ஆண்டுகளாக, பெண்களுக்கான சதுரங்க போட்டிகளில், ஜார்ஜியா பெண்கள் முன்னிலையில் உள்ளனர்.

உலக சதுரங்கத் துறையில் கிராண்ட் மாஸ்டர்களாகவுள்ள ஆண்களுக்குச் சமமான அந்தஸ்தைப்பெற்றுள்ள இரண்டு பெண்மணிகளில் மாயாவும் ஒருவர்.

இவர் ஆண்களுக்கான சதுரங்கப் போட்டிகளிலும் பங்கேற்க விரும்புகிறார். சென்ற கோடைக் காலத்தில் சுபோத்திகாவில் (யுகோஸ்லாவியாவில்), யுகாஸ்லாவ் கிராண்ட் மாஸ்டர் பீட்டர் போபோவிக்குக்கு எதிராக 8 ஆட்டங்கள் ஆடினார்; இருவருக்கும் வெற்றி தோல்வியின்றி அது முடிந்தது.

உலகில் தலைசிறந்த பெண் சதுரங்க ஆட்டக்காரருக்கான 'ஆஸ்கார்' பரிசு பல முறை மாயாவுக்குக் கிடைத்துள்ளது

## குமராட்சியில் கழக விழா

குமராட்சி, அக், 24-

குமராட்சி ஒன்றிய கழகத்தின் சார்பில் கழகம் துவங்கிய 15ம் ஆண்டு விழா குமராட்சி கடை வீதியில் நடைபெற்றது.

குமராட்சி எம்.ஜி.ஆர். மன்ற செயலாளரும் ஊராட்சி மன்ற தலைவருமான ஜே. நாராயணன் தலைமை வகித்தார் எஸ். மோகன்தாஸ் முன்னிலை வகித்தார்,

பா. மாணிக்கம்வரவேற்புரை நிகழ்த்த. முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் எம்.ஏ. அபுசாலி, கீரப்பாளையம் ஒன்றியச் செயலாளர் கே பி. பன்னீர் செல்வம். தொகுதி மாணவர் அணிச் செயலாளர் பட்டு திருநாவுக்கரசு. கே. டி. ஜோதி தில்லை மணியன் உள்பட பலர் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினர். கே.எஸ். ராதாகிருஷ்ணன் நன்றி கூறினார்.

## ஈழத்தமிழர்கள் 80 பேர் கைது

மதுரை. அக். 24-

யாழ்ப்பாணம் பகுதியில் வீடுவீடாகச்சென்று சிங்கள ராணுவத்தினர் 80 தமிழர்களைகைது செய்துள்ளனர்.

இலங்கையில் மாமன்காம் பகுதியில் சிங்கள ராணுவத்தினர் வீடுவீடாக சென்று அப்பாவித் தமிழர்களை கைது செய்து வருகிறார்கள்

ஓரிடத்தில் ஈழத்தமிழர்கள் மீது சிங்கள ராணுவம் துப்பாக்கியால் சுட்டது.

இதில் 2 தமிழர்கள் இறந்துவிட்டனர்.இரண்டு பேர் படுகாயமடைந்தனர்

இத்தகவலை மதுரையில் உள்ள ஈழத்தமிழர்கள் தகவல் நிலையம் தெரிவித்துள்ளது.

## வள்ளியூர் ஒன்றிய விழா

வள்ளியூர். அக். 24-

வள்ளியூர் ஒன்றியம் நம்பியான் விளை கிராமத்தில் ஆரம்ப பள்ளியினை பேரூராட்சி மன்ற உறுப்பினர்.டி. நடராசன் தலைமையில் ஒன்றியத்தலைவர் தங்கராஜ் திறந்து வைத்தார்.

காவல் கிணறு கிராமத்தில் 103 அரிசனங்களுக்கு இலவச வீட்டு மனைப்பட்டா வழங்கு விழா நடை பெற்றது.

இந்த விழாவுக்கு ஊராட்சி மன்ற தலைவர் மாடசாமி நாடார் தலைமை வகித்தார். ஒன்றியத்தலைவர் தங்கராஜ், பட்டாக்களை வழங்கினார்.

இந்த விழாக்களில் காவல் கிணறு கழகச் செயலாளர் லிங்கசாமி. கிராம நிர்வாக அதிகாரி சின்ன துரை உறுப்பினர்கள்சின்னசாமி, கோபால் ராமசாமி. அய்யாப்பழம் துணைத் தலைவர் ராம்சிங். சடகோபன். இலக்குமணன், துரைசங்கரன் மற்றும் பலர் கலந்துகொண்டனர்.

## வரிபாக்கி: வசூலிக்க அரசு நடவடிக்கை

புதுடெல்லி, அக். 24-

தலா ஒருகோடி ரூபாய்க்கும் மேலாக மத்திய எக்சைஸ் வரிபாக்கிவைத்துள்ள சில பொதுத்துறை நிறுவனங்கள் உட்பட பல தொழில் தொழிற்சாலைகளை நிதியமைச்சகம் இனம் கண்டுள்ளது இவற்றின் மொத்த வரி பாக்கி ரூபாய் 600கோடி என்று மதிப்பிடப்பட்டுள்ளது

இந்த நிறுவனங்களுடன் கலந்து பேசி தீர்வு ஒன்றை கண்டு நடப்பு நிதியாண்டிலேயே பெருமளவு பாக்கியை வசூலிப்பதற்கான ஏற்பாடுகளை வருவாய்த்துறை செய்து வருகிறது.

சில பெரிய தொழில் நிறுவனங்கள் வருவாய்த் துறையை தீர்வுககென அணுகியுள்ளன. இவை செலுத்த வேண்டிய வரி பாககி ரூபாய். 186 கோடி இதில் ரூபாய் 128 கோடி வரிபாக்கியை செலுத்திட நிறுவனங்கள் முன் வந்துள்ளன ஏற்கனவே ரூபாய்64கோடி வசூலிக்கப் பட்டுவிட்டது

இதுதவிர உச்சநீதிமன்ற தீர்ப்பு வழங்கப்பட்ட சில வழக்குகள் சம்பந்தப்பட்ட உயர் நீதிமன்றங்களின் முறையான உத்தரவுக்காக காத்திருககின்றன இதற்கு 100 கோடி ரூபாய் செலவாகும். இத்தகைய வழக்குகளிலும் சம்பந்தப்பட்ட நிறுவனங்கள் நேரடியாக அணுகி கோர்ட்டுக்கு வெளியே வழக்குகளை பைசல் செய்து கொள்ள முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

மூன்று நிறுவனங்கள் தாமாகவே முன் வந்து ரூபாய் 96 லட்சம் சுங்க எக்சைஸ் வரிபாக்கி குறித்து அறிவித்துள்ளன வருவாய்த் துறையின் புதிய திட்டம் ஒன்றின் கீழ் இந்த மூன்று நிறுவனங்கள் வரிபாக்கி குறித்து தெரிவித்துள்ளன இது குறித்தும் இலாகா பரிசீலித்து வருகின்றது

## அண்ணா மாவட்டத்தில் சுயவேலை வாய்ப்பு

திண்டுக்கல். அக். 24-

படித்து வேலையற்ற இளைஞர்களுக்கு சுய வேலை வாய்ப்பு திட்டம் 86-87ம் வருடத்தில் தொடர்ந்து செயல்படுத்தப்படுகிறது. இத்திட்டத்தின் மூலம் தொழில்கள் ஆரம்பிக்க ரூபாய் 35,000- அதிகபட்சமாக 10 சதவிகித வட்டி விகிதத்தில் கடன் வழங்கப்படும். இதில் 25% மான்யமாக கருதப்படும்.

மாவட்டத் தொழில் மையத்தில் இவ்வருடத்தில் இதுவரை 305 நபர்களை தேர்ந்தெடுத்து அவர்களுடைய விண்ணப்பங்களை வங்கிகளுக்கு பரிந்துரை செய்யப்பட்டுள்ளது.

கடன்பெறும்தொகைரூ. 69.2 லட்சம். இதில்13 நபர்கள் தாழ்த்தப்பட்ட பிரிவினை சேர்ந்தவர்கள். மற்றும் 52 மகளிர், இதன் மூலம் பயனடைவர்.

அண்ணா மாவட்டத்திற்கு கொடுத்துள்ள குறியீடான 600-ல் தாழ்த்தப்பட்ட இனத்தவர்க்கு 200 ஒதுக்கப்பட்டுள்ளது.

ஆகவே, தாழ்த்தப்பட்ட இனத்தவரில், 18 வயதுக்கு மேல்35 வயதிற்குள் உள்ள நபர்கள் இத்திட்டத்தின் மூலம் பயன் பெற மாவட்டத்தொழில் மையத்திற்கு விண்ணப்பம் செய்துகொள்ளுமாறு அண்ணா மாவட்ட ஆட்சித்தலைவர் எம். மாதவன் நம்பியார் கேட்டுக் கொண்டுள்ளார்.

## அமைச்சர் திருநாவுக்கரசு டெல்லி பயணம்

சென்னை, அக், 24-

டெல்லியில் 25ம் தேதி தொடங்கவிருக்கும் தமிழ் நாடு பட்டு,கண்காட்சியை அமைச்சர் திருநாவுக்கரசு தொடங்கி வைக்கிறார், அவர் இதில் கலந்து கொள்ள இன்று டெல்லி செல்கிறார்.

## சேலம் இரும்பு ஆலைக்கு சர்வதேச பரிசு

சேலம், அக். 24-

சேலம் இரும்பாலைக்கு 1986 ஆம் ஆண்டுக்கான இங்கிலாந்து சர்வதேச பாதுகாப்பு கழகத்தின் பாதுகாப்பு விருதுகிடைத்துள்ளது

''புகழ்வாள்'' விருது பரிசாக 2ம் முறை இவ்வாலைக்கு கிடைத்துள்ளது.

## இலங்கை அகதிகளுக்கு ரூ.8 கோடி செலவு

இராமநாதபுரம், அக். 24-

இலங்கையில் இருந்து தமிழ் நாட்டிற்கு வந்துள்ள ஈழத்தமிழர் அகதிகளுக்காக இதுவரை 8கோடிரூபாய் செலவிடப்பட்டுள்ளது.

ஒரு லட்சத்து 28 ஆயிரம் அகதிகள் தமிழகத்தில் பல்வேறு முகாம்களில் தங்கியுள்ளனர்.

இத்தகவலை மறுவாழ்வுத்துறை டைரக்டர் வி. பழனிசாமி தெரிவித்துள்ளார்.

## இராமநாதபுரத்தில் கப்பல் பழுது பார்க்கும் தளம்

இராமநாதபுரம்,அக்.24-

இராமநாதபுரம் மாவட்டம்வாலிநோக்கத்தில் டிட்கோ அமைப்பு சார்பாக கப்பல் பழுது பார்க்கும் தளம் கட்டப்படுகிறது.

இத்தகவலைஇராமநாதபுரம் மாவட்ட ஆட்சித்தலைவர் தேவேந்திரநாத் சாரங்கி நிருபர்களிடம் தெரிவித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-

வாலி நோக்கத்தில் கப்பல்பழுது பார்க்கும் தளம் டிட்கோ உதவியில் அமைக்கப் படுகிறது. இதற்கு மத்திய அரசு 35 லட்ச ரூபாய் கடனுதவி வழங்க உள்ளது.

இந்த தளத்திற்கு அடிப்படை வசதிகள் அமைக்க ஆகும் செலவில் பாதியை டிட்கோஏற்கிறது.

ராமநாதபுரம்மாவட்டத்தில் ஐரோப்பியபொருளாதார அமைப்பின் உதவியுடன் 3 கோடியே 18 லட்ச ரூபாயில் 14 பாசன அணைகள் சீரமைக்கப் பட்டு வருகின்றன.

நெற்பயிர்கள் வளர்ப்பு தீவிரமாக நடைபெற்று வருகிறது. விவசாயிகளுக்கு உர உப்பு சலுகை விலையில் தரப்படுகிறது. விவசாயிகளுக்கு மஞ்சூரில் ஒருங்கிணைந்த நில அபிவிருத்தி பயிற்சி திட்டத்தின் கீழ் பயிற்சி அளிக்கப் படுகிறது

இவ்வாறு மாவட்ட ஆட்சித்தலைவர் சாரங்கி கூறினார்.

## மேட்டூர் நீர்மட்டம்

திருச்சி. அக். 24-

மேட்டூர் அணையின் நீர்மட்டம் நேற்று மாலை 59 அடியாக இருந்தது.

அணைக்கு வினாடிக்கு 4ஆயிரத்து 517 கன அடி தண்ணீர் வந்து சேருகிறது.

## கழக 15-ம் ஆண்டு தொடக்கவிழா பொதுக்கூட்டங்கள்

சென்னை துறைமுகப் பகுதி

(ஏற்கனவே அறிவிக்கப்பட்ட கூட்டங்கள்-இணைப்பு)

**25ந் தேதி**

தப்புச் செட்டித்தெரு

திரு ஆர் கே, சண்முகம் அவர்கள்

திரு. கவிஞர் முத்துராமலிங்கம் அவர்கள்

திரு. தரங்கை கண்ணன் அவர்கள்

**26ந் தேதி**

கோவிந்தப்ப நாயக்கன் தெரு

திரு. ஆர் கே. சண்முகம் அவர்கள்

திரு. கவிஞர் முத்துராமலிங்கம் அவர்கள்

திரு. தரங்கை கண்ணன் அவர்கள்

**27ந் தேதி**

ஆச்சாரப்பன் தெரு

திரு. ஆர் கே. சண்முகம் அவர்கள்

திரு. கவிஞர் முத்துராமலிங்கம் அவர்கள்

திரு. தரங்கை கண்ணன் அவர்கள்

கழக நிறுவனத்தலைவரும் கழகப் பொதுச் செயலாளருமான இதயதெய்வம் மாண்புமிகு முதல்வர் டாக்டர்

**புரட்சித்தலைவர்** அவர்கள்

அனுமதியுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**ஜெயலலிதா எம்.பி.**

சென்னை-14 கழக கொள்கைபரப்புச் செயலாளர்
24-10-86 அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

# நவம்பர் 1-ந்தேதி முதல் மேலவைக் கலைப்பு

சென்னை, அக். 24- [த]மிழக மேலவை நவம்[பர்] 1-ந்தேதி முதல் [க]லைக்கப்படுவதாக அதி[கா]ர பூர்வமாக [அறிவி]க்கப்பட்டுள்ளது. [த]மிழக சட்ட மேலவை மேலவையைக் கலைப்பது என்ற தீர்மானம் தமிழக சட்டசபையில் கடந்த மே 14ந் தேதி நிறைவேற்றப்பட்டது.

ஒரு மாநிலத்தின் மேலவை ஒழிக்கப்பட வேண்டுமானால் அதற்கான சட்டம் பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் நிறைவேற்றப்பட்டு ஜனாதிபதியின் ஒப்புதலைப் பெற வேண்டும்.

## ஜனாதிபதி ஒப்புதல்

அதன்படி தமிழக மேலவை ஒழிப்பு தீர்மானத்தை மத்திய அரசு பாராளுமன்றத்தில் தாக்கல் செய்தது.

இந்த தீர்மானம் பாராளுமன்றத்தில் ஆகஸ்டு12-ந் தேதி நிறைவேற்றப்பட்டது.

பிறகு ஆகஸ்ட் 14-ந் தேதி டெல்லி மாநிலங்களவையில் நிறைவேறியது.

மேலவை ஒழிப்புக்கு செப்டம்பர் 4-ந் தேதி ஜனாதிபதி ஜைல்சிங் ஒப்புதல் அளித்துகையெழுத்து போட்டார்,

எந்த தேதியில் இருந்து மேலவை கலைப்பை அமலுக்கு கொண்டு வருவது என்று தமிழக அரசிடம் மத்திய அரசு கேட்டது.

வருகிறநவம்பர் 1ந்தேதி முதல் மேலவையைகலைக்கலாம் என்று தமிழகஅரசு சிபாரிசு செய்தது

அதை மத்திய அரசு ஏற்றுக்கொண்டது. நவம்பர் 1ந்தேதி முதல் மேலவை கலைக்கப்படும் என்று அதிகாரப்பூர்வமாக அறிவித்துள்ளது. இது பற்றிய அறிவிப்பு 'கெசட்'டில் வெளியாகியுள்ளது.

மேலவையில் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை 63. அதில் 31இடங்கள் காலியாக இருந்தன.

மேலவைத் தலைவராக ம.பொ.சி. இருந்துவந்தார் அவரும் 31 உறுப்பினர்களும் நவம்பர் 1ந் தேதி முதல் 'எம். எல். சி.' பதவியை இழக்கிறார்கள்.

# திரைப்படவிழா: 4 இந்திய திரைப்படங்கள்

புதுடெல்லி, அக் 24- வரும் நவம்பர் 13லிருந்து 30ம் தேதிவரைலண்டனில் நடைபெறவிருக்கும் சர்வதேச திரைப்பட விழாவில் கலந்து கொள்ள விஜய மேத்தா இயக்கிய 'ராவ்சாகேப்', ஜி.அரவிந்தனின்' சிதம்பரம்' ரமேஷ் சர்மா இயக்கிய 'நியூ டெல்லிடைம்ஸ்', ஷியாம் பெனகலின் 'திரிகால்' ஆகிய படங்கள் இடம் பெறுகின்றன. ஷியாம் பெனகலும்விஜய மேத்தாவும் திரைப்படவிழாவில் பங்குகொள்கின்றனர்.

# பாகிஸ்தான் புகார்: இந்தியா மறுப்பு

புதுடெல்லி, அக். 24- விசாகப்பட்டினம் கப்பல் துறையில் சோவியத் ரஷ்யாவின் யுத்தக்கப்பல்கள் தங்கிச் செல்வதாக பாகிஸ்தான் கூறுவது ஆதாரமற்றமற்றசெய்தி என இந்தியா தெரிவித்துள்ளதுஇந்தியாவில்விசாகப்பட்டினம் கப்பல்கட்டும் துறைக்கு, சோவியத் ரஷ்யாவின் போர்க்கப்பல்கள் வந்து தங்கிச் செல்வதாகவும் சோவியத் கப்பல்களுக்கு விசாகப்பட்டினம் துறைமுகம்தங்குமிடமாகப் பயன்படுவதாகவும் பாகிஸ்தான் அரசுபுகார் கூறியிருந்தது.

இந்திய வெளிவிவகாரத் துறையைச் சேர்ந்த அதிகாரி ஒருவர் இதை மறுத்துள்ளார்.

கடந்த சில வருடங்களில் எந்த ஒரு நாட்டின் யுத்தக்கப்பல்களும் விசாகப்பட்டினம் துறைக்கு வரவில்லை என்றும் அந்த அதிகாரி மேலும்தெரிவித்துள்ளார்,

# கழகத் தோழர்களை தாக்கி தி.மு.க. அட்டூழியம்

சென்னை, அக். 24- துறைமுகத்தில் பணியாற்றும் அண்ணா கப்பற்கூட- லாரி தொழிலாளர்களையும், சங்க பொதுச் செயலாளர் சாத்தூர் ஆர். கணேசனையும் மற்றும் சக்கரவர்த்தி ஆகியோரையும் தி.மு.க வைச் சேர்ந்த செருப் சந்திரன் மற்றும் அவரது ஆட்கள் தாக்க முயன்றதோடு கத்தியைக் காட்டியும் மிரட்டினர்.

இதுதொடர்பாக துறைமுகம் காவல்நிலையத்தில் புகார் செய்யப்பட்டுள்ளது தி.மு.க. வினரின் வன்முறைச் செயலை கண்டித்து கழகசார்பில் கண்டனக் கூட்டம் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில் சென்னை மாவட்ட அண்ணா தொழிற் சங்க பேரவைத்தலைவர் வெ. மாயன். வட சென்னை சிறு வியாபாரிகள் சங்கத்தலைவர் டி.ஆர், சுந்தரம் சாத்தூர் கணேசன், அண்ணாமலை, உள்ளிட்டோர் தி.மு.க,வினரின் வன்முறை வெறியாட்டத்தை கண்டித்தனர்.

# போப் கோரிக்கை: போராளிகள் ஏற்பு

சென்னை,அக்.24- போப் ஜான்பாலின் கோரிக்கைக்கு ஏற்பஅக்டோபர் 27-ந்தேதி ஒரு நாள் சிங்களராணுவத்துடன் போர் நிறுத்தம் செய்ய விடுதலைப்புலிகள் ஒப்புக் கொண்டுள்ளனர்.

போப்ஜான்பால் சமீபத்தில் பிரான்ஸ் நாட்டிற்கு சென்றிருந்த போது, உலகில் சமாதானத்தை வலியுறுத்தும் வகையில் அக்டோபர் 27-ந் தேதி ஒரு நாள் உலகில் யாரும் யாரோடும் சண்டையிட வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டுள்ளார்.

இலங்கை அரசுக்கும், தமிழ் போராளிகளுக்கும் அக்டோபர் 27ந் தேதி ஒரு நாள் போர் நிறுத்தம் செய்யுமாறுபோப் வேண்டுகோள் விடுத்திருந்தார்.

இந்த வேண்டுகோளை இலங்கை அரசு ஏற்றுக் கொண்டுள்ளதாக இலங்கை பாதுகாப்பு அமைச்சர் லலித் அதுலத் முதலி அறிவித்துள்ளார்.

தற்போது போப்பின் கோரிக்கையை தமிழ் போராளிகளும் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

சிங்களராணுவத்தினர் தங்கள் முகாம்களில் இருந்து அன்றைய தினம் வெளி வராமல் இருக்க வேண்டும் என்றும் அவ்வாறு அவர்கள் இருந்தால் குறிப்பிட்ட தினத்தன்று தாங்கள் எந்தவித தாக்குதலையும் செய்ய மாட்டோம் என்றும் போராளிகள் தெரிவித்துள்ளனர்.

## டெல்லியில் தீட்சித் ஆலோசனை

இலங்கையில் உள்ள இந்திய தூதர் தீட்சித் இலங்கை நிலவரம் குறித்து டெல்லியில் வெளி விவகார அமைச்சர் என்.டி.திவாரியைச் சந்தித்துப் பேசினார்.

தமிழ்நாட்டில் அமைச்சர் பண்ருட்டிராமச்சந்திரனுடன் நடத்திய பேச்சு வார்த்தை குறித்தும் தீட்சித் அமைச்சர் திவாரியிடம் கூறினார்.

# ஈரோடு - சேலத்தில் 833லட்ச ரூபாயில் புதிய குடியிருப்புகள்

சேலம், அக்.24- தமிழகத்தில்ஈரோடு, சேலம் மாவட்டத்தில் தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்தின் மூலம் 833 லட்ச ரூபாயில் புதிய குடியிருப்புகள் கட்டப்படஉள்ளன. என்று குடிசை மாற்று வாரியத் தலைவா பா. அங்கமுத்து சேலத்தில் நடந்த செய்தியாளர்கள் கூட்டத்தில் தெரிவித்தார்.

அவர் தெரிவிக்கையில் தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்தின் மூலம் சென்னையில் 45 ஆயிரம் அடுக்குமாடிகுடியிருப்புகள் கட்டப்பட்டுள்ளது மேலும் 75 ஆயிரம்குடும்பங்களுக்கு வீட்டு மனைப் பட்டா வழங்கப்பட்டு உள்ளது,

தமிழகமுதல்வர்புரட்சித் தலைவரின் திட்டப் படி இவ்வாண்டு 1.10 லட்சம் வீடுகள் கட்டத்தீர்மானித்துள்ளோம்.

மேலும் ஈரோடு பெரும் பள்ளம் ஓடையில் ரூபாய் 120 இலடசத்தில் 468 குடியிருப்புகளும். இதே போன்று ஈரோடு பவானி ரோட்டில் ரூபாய் 172 லட்சத்தில் 648 வீடுகளும், சேலத்தில் உள்ள ஆண்டிபட்டிஏரியில் ரூபாய் 185 லட்சத்தில் 684 வீடுகளும் (மொத்தம் ரூபாய் 833 லட்சம்) கட்ட தீர்மானித்துள்ளோம்

## அடிப்படை வசதி

குடிசை வாழ் மக்களுக்கு அடிப்படை வசதிகள் செய்யப்பட்டு வருகிறது.

இதன்படி பெரியார் மாவட்டத்தில் ரூபாய் 11 இலட்சத்தில் 700 குடும்பங்களும். சேலம் மாவட்டத்தில் ரூபாய் 39 இலடசத்தில் 2600 குடும்பங்களும், கோவை மாவட்டத்தில் ரூபாய் 70 இலட்சத்தில் 4100 குடும்பங்களும், தர்மபுரியில் ரூபாய் 11 இலட்சத்தில் 700 குடும்பங்களும் பயன் பெறுவர். மேலும் இம்மாவட்டத்திலுள்ள குடும்பங்களுக்கு மானியம் மற்றும் கடன் வசதியும் செய்யப்பட்டுள்ளது.

இவ்வாறு அவர் பேட்டியின்போது தெரிவித்தார்.

## வரவேற்பு

சேலம் நகரில் உள்ள ஆண்டிப்பட்டி ஏரி. நஞ்சம் பட்டி, முள்ளுவாடி, கார் பேட் சேரி ஆகிய பகுதிகளை தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்தலைவர் பா,அங்கமுத்து பார்வையிட்டார்.

அவருடன்குடிசை மாற்று வாரிய நிர்வாக பொறியாளர் தியாகராஜன், உதவி நிர்வாக பொறியாளர் வேலுகாந்தன், ஒதுக்கீட்டு அதிகாரி முருகேசன், கழக எம்.எல்.ஏ. கிருஷ்ணராஜ் மற்றும் தலைமைக் கழக பேச்சாளர் புரட்சி மணி, சென்னை கழக 106வது வட்ட செயலாளர் கஜேந்திரன், கழகத்தைச் சேர்ந்த வேலுசாமி, சம்பங்கி ஆகியோர் உடன் சென்றனர்.

மேற்கண்ட இடங்களுக்கு வாரியத்தலைவர் சென்ற போது குடிசை மக்கள் சிறப்பான வரவேற்பை தந்தனர்.

# வறட்சிப் பணிக்கு மத்திய அரசு உதவி

சென்னை, அக் 24- தமிழ்நாட்டில் வறட்சி நிவாரணப் பணிக்கு மத்திய அரசு நிதிஉதவி வழங்கியுள்ளது.

தமிழ்நாட்டின் வறட்சி நிவாரணப்பணிக்கென ரூபாய் 31001.585 லட்சம் நிதி உதவி அளிக்க மத்திய அரசை தமிழக அரசு கோரியிருந்தது. அதன்படி மத்திய அரசு ரூபாய் 3176 82லட்சம்நிதி உதவியை அளித்துள்ளது.

மத்திய அரசு அளித்துள்ள உதவி கீழ்க்கண்ட பணிகளுக்குப் பயன் படுத்தப்படுகிறது, டாங்கிகள் மூலம் தண்ணீர் எடுத்துச் செல்ல, துளைக்கிணறுகள் அமைக்க, புதிய திறந்த கிணறுகள் அமைக்க, துளைக் கிணறுகளில் அடைப்புகளை நீக்கி சுத்தம் செய்ய பொதுக் கிணறுகளை ஆழப்படுத்த குடிநீர் மேம்பாட்டுப் பணிகள் மற்றும் வேலை வாய்ப்பு பணிகள் பொதுசுகாதாரம் ஆகியவற்றுக்குப் பயன் படுத்தப் படுகிறது.

# ஆவின் வெண்ணெய்: விஷேச ஏற்பாடு

சென்னை,அக்.24- ஆவின் வெண்ணெய் பொதுமக்களுக்கு தட்டுப்பாடின்றி கிடைக்க விஷேச ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. நாள் தோறும் விற்பனைக்கு 5 ஆயிரம் கிலோ வெண்ணெய் தற்போது அனுப்பப்படுகின்றது, இது வழக்கமாக அனுப்பப்படும் அளவைக்காட்டிலும் 2,000 கிலோ அதிகமாகும். வெண்ணெய் சென்னை நகரிலுள்ள 50 பாலகங்களிலும் மற்றும் ஆவின் ஏஜென்ஸிகள் மூலமாகவும் புகாருக்கு இடமின்றி வினியோகித்து வரஏற்பாடாகியுள்ளது.

ஆவின் வெண்ணெய் விற்பனையில் குறைபாடுகள், தட்டுப்பாடுகள் இருப்பின் கீழ்கண்ட அலுவலர்களுக்குத் தொலை பேசி மூலம் தொடர்பு கொண்டால் ஆவின்வெண்ணெய் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யப்படும்.

பொதுமேலாளர் 652064 விற்பனைமேலாளர்662748 663222,663937. 451935 (24மணி நேரமும்இயங்கும் ஆவின் நுகர்வோர் பிரிவு)

# 128 முன்சீப்புகளை நியமிக்க அரசு ஆணை

திருச்சி, அக். 24- தமிழ்நாடு நீதித்துறையில் 128 மாவட்ட நீதிபதிகளை நியமிக்க அரசு உத்தர விட்டுள்ளது.

நீதிமன்றங்களில் காலியாக உள்ள இடங்களை நிரப்ப வேண்டும் என்ற கோரிக்கை இருந்து வந்தது.

இதைத் தொடர்ந்து மாவட்ட நீதிபதிகளை நியமிக்க அரசு ஏற்பாடு செய்துள்ளது.

தமிழ்நாடுநீதித்துறையில் 128 மாவட்ட நீதிபதிகளை நியமிக்க அரசு உத்தரவிட்டுள்ளது. இவர்களில் 70 பேர் நேரடியாக நியமனம் பெறும் வழக்கறிஞர்களாக இருப்பார்கள்.

மற்ற 58 பேர் பதவி உயர்வு பெறும் நீதித்துறை அலுவலர்களாக இருப்பார்கள்.

தமிழ்நாடு அரசு தேர்வாணை வாரியத்தின் மூலம் 128 பேர் நியமிக்கப்படுவார்கள் என்றும் முதலில் 70பேர்நேரடித்தேர்வு மூலம்நியமிக்கப்படுவார்கள என்றும் தெரியவருகிறது.

# பம்பாயில் ரூ.5 கோடி கறுப்பு பணம் சிக்கியது

பம்பாய். அக். 24- பம்பாயில்வருமானவரிஅதிகாரிகள் சோதனைநடத்தி ரூபாய் 5கோடி கறுப்புப் பணத்தை கண்டுபிடித்தனர். பம்பாயிலுள்ள பங்கு (ஷேர்)மார்க்கெட் புரோக்கர்கள் வீடுகளிலும் அலுவலகங்களிலும் வருமான வரி அதிகாரிகள் சோதனை நடத்தினார்கள். மொத்தம் 27 பேர் அலுவலகங்களில் இந்த சோதனை நடந்தது

ரூபாய் 5 கோடிக்கு மேல் மதிப்புள்ள கணக்கில் காட்டப்படாத ரொக்கம், நகைகள், பங்குப் பத்திரங்களைக் கைப்பற்றினர்.

கைப்பற்றப்பட்ட சொத்துக்களில் ரூ40 லட்சம் ரொக்கமும். ரூபாய் 50 லட்சம் நகைகளும் அடங்கும் என்று அதிகாரிகள் தெரிவித்தனர். மொத்தம்500 அதிகாரிகள் இந்த சோதனையில் ஈடுபட்டனர். 50 அலுவலகங்களிலும் வீடுகளிலும் சோதனை நடந்துள்ளன.

# போதுப்பணித் துறை



டெண்டர் நோட்டீஸ்
எண். 15- SBC-MS-86-87

## ஒப்பந்த விவரம்: மோத்தத் தோகை

தமிழ்நாடு அரசு ஆளுநர் அவர்கள் சார்பில் அவர்களுக்காக கீழ்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள், கண்காணிப்புப்பொறியாளர் அலுவலகம், பொதுப்பணித்துறை ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள சேப்பாக்கம் சென்னை-600005 அவர்கள் விலாசத்தில் கீழே ஒவ்வொன்றிற்கும் எதிராக குறிப்பிடப்பட்ட தேதிகளில் பிற்பகல் 3 மணி வரை பெற்றுக் கொள்ளப்பட்டு அதே தினம் பிற்பகல் 3.15 மணிக்கு திறக்கப்படும். டெண்டர் தேதிக்கு முன்னதாக, முத்திரையிட்ட டெண்டர்கள் தபால் மூலம் பெற்றுக்கொள்ளப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | டேவணித் தொகை டெபாஸிட் | முடிக்கப்பட வேண்டிய காலம் |
|---|---|---|---|
| | | ரூ. | |
| 1. | சென்னை-600010, கீழ்பாக்கம் மருத்துவக்கல்லூரி மருத்துவமனையில் நிர்வாகம் மற்றும் ஸ்டோர் பிளாக்கிற்கான பைல் பவுண்டேஷன் மீது கட்டிடம் கட்டுதல் | 6,100- | மூன்று மாதங்கள் |
| 2 | செங்கல்பட்டு மாவட்டம். மதுராந்தகத்தில் உள்ள தாலுக்கா தலைமை மருத்துவமனையில் 20 படுக்கைகள் கொண்ட வார்டுடன் அறுவை சிகிச்சை தியேட்டர் கட்டுதல் | 2,500- | ஆறு மாதங்கள் |

3. டெண்டர் கோருவதற்கு தகுதியுடைய காண்ட்ராக்டர்கள் பதிவு பெற்ற வகுப்பு மற்றும் வரம்பு:
   இனம்- 1 IA வகுப்பு
   இனம்-2 II வது வகுப்பு
4. டெண்டர் பெற்றுக்கொள்வதற்கான இறுதிதேதி 10-12-1986
5. டெண்டர் குறிப்புகள் கிடைக்கும் தேதி: 24-11-86 முதல் 8-12-86 வரை
6. டேவணித் தொகை செலுத்த வேண்டிய பொ. ப. து. செயற்பொறியாளர்
   இனம்-1 பில்டிங்ஸ் டிவிஷன் எண் III சென்னை-600 005
   இனம்-2 பில்டிங்ஸ் டிவிஷன் காஞ்சிபுரம்

டெண்டர் குறிப்புகள் பொதுப் பணித்துறை மற்றும் இதர அரசு இலாக்காக்கள் அரசு நிறுவனங்களில் மேலே பாகம்5ல்குறிப்பிட்டவாறு பதிவுப்பெற்றுள்ள காண்ட்ராக்டர்களுக்கு வழங்கப்படும். டெண்டர் குறிப்புகள் மேலே பாகம்5-ல் குறிப்பிட்டுள்ளபடி உரிய வகுப்பிற்கு ஒரு நிலை குறைவான வகுப்பில் பதிவு செய்திருந்தாலும் வழங்கப்படும். மேற்கண்ட பணியை பெறுவதில் வெற்றி பெற்றால், அவர்கள் தங்களை,பொப்துபணித்துறையின் உரிய வகுப்பில், அந்தப்பணி அவருக்கு அளிக்கம்படுவதற்கு முன்னதாகவே பதிவுசெய்து கொள்ளவேண்டும்.

டெண்டர் பத்திரங்களின்விலை(ரூ 100+5+0-50-105-50) விற்பனை வரி சர்சாஜ் வரைப்படங்கள் உட்பட ரூ 105-50 ஆகும் இந்த தொகை எக்காரணத்தை முன்னிட்டும் திருப்பியளிக்கப்படமாட்டாது.டெண்டர் பத்திரங்களுக்கான விலை, சம்பந்தப்பட்ட செயற்பொறியாளர் சார்பில் டிமாண்ட் டிராப்டாக பெற்றுக் கொள்ளப்படும்.

டேவணித் தொகை டெபாஸிட். ஏதாவது ஒரு வகை செக்யூரிட்டியாக (பாங்க் கியாரண்டி நீங்கலாக) சிறுசேமிப்பு பத்திரம்- டெபாஸிட்- கணக்குகள் மூலம் பெற்றுக்கொள்ளப்படும்.அவ்வாறு பெற்றுக்கொள்ளப்படும் குறுகிய கால செக்யூரிட்டிகள், டெண்டர் இறுதி முடிவு செய்யப்படும் காலம் வரை செல்லுபடியாக்க கூடியதாக இருக்க வேண்டும்.

மேற்கண்ட வேலைகளுக்கான டெண்டர் பத்திரம் மற்றும் இதர விவரங்கள் ஆகியவை கண்காணிப்புப் பொறியாளர், அலுவலகம், பொதுப்பணித்துறை, ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள், சென்னை, அவர்களிடமிருந்து எல்லா அலுவலக நாட்களிலும் அலுவலக நேரங்களில் பெற்றுக் கொள்ளலாம். டெண்டர் பத்திரங்களை தபால் மூலம் அனுப்பக் கோரி வரும் வேண்டுகோள்கள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. டெண்டர் பத்திரங்கள் பெறுவதற்காக இறுதி தேதியன்று பிற்பகல் 3 மணிக்கும் மேற்பட்டு கிடைக்கப் பெறும் விண்ணப்பங்கள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

டெண்டர் திறக்கப்படும் தேதி,ஏதாவது காரணங்களுக்காக, அரசு விடுமுறையாக அறிவிக்கப்படுமாயின் டெண்டர்கள் அதற்கு அடுத்த வேலை நாளன்று பிற்பகல் 3 மணிக்கு பெற்றுக் கொள்ளப்பட்டு, அதே தினம் பிற்பகல் 3.15 மணிக்கு திறக்கப்படும்.

**டெண்டர் ஒத்திவைப்பு அறிவிப்பு 6-எஸ்பிஸி-எம் எஸ் - 86-87, 7 எஸ்பிஸி - எம்எஸ் - 86-87, 8 எஸ்பிஸி எம்எஸ் 86-87 9 எஸ் பி ஸி -எம் எஸ் 86-87**

| வரிசை எண் | வேலையின் பெயர் | டெண்டர் பெற்றுக் கொள்வதற்கான தேதி | டெண்டர் குறிப்புகள் கிடைக்கும் காலம் |
|---|---|---|---|
| 1. | சென்னை,கே.கே.நகரிலுள்ள செயற்கை உறுப்புகள் பொறுத்தும் நிலையம் மற்றும் மறுவாழ்வு நிலையத்தில் ஆபரேஷன்தியேட்டர் மற்றும் போஸ்ட் ஆப்பரேட்வ் வார்டு ஆகியவற்றிற்கு முதன் மாடி கட்டுதல் | 26-11-86 | 14-11-86 முதல் 24-11-86 வரை |
| 2 | சென்னை. 600 005 மெரீனா சீரணி அரங்கிற்கு கிரௌண்ட் கான்க்ரீட் சாலை | 26-11-86 | 14-11-86 முதல் 24-11-86 வரை |
| 3. | சென்னை, 600 020, அடையாறு, மருதம் காம்ப்ளெக்ஸில் உள்ள ஸ்தலத்தில் இரண்டு I. M. F. S. கிடங்கு, அலுவலகம், மற்றும் அலுவலக கட்டிடம் கட்டுதல் | 28-11-86 | 17-11-86 முதல் 26-11-86 வரை |
| 4 | சென்னை, தங்கசாலையிலுள்ள கோட்டை - தண்டையார்பேட்டை தாலுகா அலுவகத்தில் தாலுகா அலுவலக கட்டிடம் கட்டுதல் | 28-11-86 | 17-11-86 முதல் 26-11-86 வரை |

இதர நிபந்தனைகளில் மாற்றம் ஏதுமில்லை

கண்காணிப்புப் பொறியாளர்
பொதுப் பணித்துறை
ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள்
சேப்பாக்கம் சென்னை 600 005

DIPR-41-Ms-86-MA

## கோவை வெள்ளலூரில் கழக விழா

கோவை, அக் 24-
கோவை-வெள்ளலூரில் மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணி துணைச் செயலாளர் பால கிருஷ்ணன் தலைமையில் கழகம் துவங்கிய 15ம்ஆண்டுவிழா நடைபெற்றது. அமைச்சர் கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன் சிறப்புரையாற்றி சக்தி கருப்புசாமி வழங்கிய சுவர்க் கடிகாரத்தை துவக்க பள்ளிக்கு பரிசாக வழங்கினார்.

இந்த விழாவில்சட்டமன்ற உறுப்பினர் சின்னராசு மாவட்டச்செயலாளர் வ. ஜெயராமன் சிங்கைலிங்கராசு. சிங்கைபாலன், திருமலைசாமி.கோவிந்தராஜ் கே. என்.ஆர். ஆறுமுகம் ஆகியோர்பேசினார்கள்.

# இது உமது பிரச்சினையா?

கேள்விகளை அடுக்கிக்கொண்டே போகலாம். இதற்கெல்லாம் எம். ஜி. ஆர். அவர்களால் சரியான பதில் அளிக்க முடியாது.

- கருணாநிதி கடிதம்

கல்யாணத்துக்கு உமக்கு அழைப்பே இல்லை! கல்யாண விருந்துக்கான இலை 'பொத்தல்' என்கிறீர்! உமக்குத்தான் தமிழக மக்கள் அந்தஅதிகாரத்தையே தரவில்லையே! தமிழகம் என்றும் புரட்சித்தலைவரின் பக்கமே என்பதை அறிந்தும், ஏதாவது எழுத வேண்டுமே என்பதற்காக எழுதுவதா?

# கொலையாளி ஜெபராஜ் குடும்பத்தின் மீது புகார்

சென்னை.அக்.24-
நடிகை ராணிபத்மினி அவரது தாயார் ஆகியோரை கொலை செய்ததாககருதப்படும்ஜெபராஜ் குடும்பத்தினர் மீது ஏற்கெனவே சில புகார்கள் இருந்தன.

ஜெபராஜின் தந்தை மகாத்மா காந்தி. வ. உ. சி. மாவட்டம் நாசரேத்தைச் சேர்ந்தவர் தாயார் ராஜாத்தி.

நாசரேத் பஸ்நிலையம் முன்பு லாரியை ஏற்றி மூவர் கொல்லப்பட்டனர். இது சம்பந்தமாக காந்தி குடும்பத்தினர் மீது புகார் கூறப்பட்டதாக இப்போது தெரியவருகிறது.

சென்னை கீழ்ப்பாக்கத்தில் கார்மெக்கானிக்ஷெட் ஒன்றை ஜெபராஜ் குடும்பத்தினர் நடத்தி வந்ததாகவும், அப்போது கார்களை... கள்திருடி விற்று வந்ததாகவும் இப்போது புகார் கூறப்படுகின்றன.

இது குறித்தும் போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகின்றனர்.

# வரதட்சணை ஒழிப்பு: ஆலோசனைக் குழு

சிவகங்கை, அக். 24-
பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் வரதட்சணை கொடுமைகளை ஒழிக்க மாவட்ட ஆட்சித் தலைவர் கோபாலன், தலைமையில் 8 நபர்கள் கொண்ட ஆலோசனைக்குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

மாவட்ட ஆட்சித் தலைவர் ஆர். கோபாலன் தலைவராகவும். மாவட்ட செசன்ஸ் நீதிபதி பிரதாப் சிங், உதவி தலைவராகவும், மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளர் ஆர். சேகர் ஆகியோரை செயலாளராகவும் கொண்டு இந்தக்குழு செயல்படும்.

மாவட்ட மருத்துவ அலுவலர் ஜெய்சங்கர்மாவட்ட சமூகநல அலுவலர் ஆர். நாகரெத்தினம், அரசு வழக்கறிஞர் லட்சுமி நாராயணன் ஆகியோர்களும், பொதுத்தொண்டுகள் செய்து வரும் சிவகங்கை பாரிரதம் பொன் பாண்டியன், மானா மதுரை ராஜேஸ்வரி ஆகியோர்களும் இந்தக் குழுவில் உறுப்பினர்களாகச் செயல்படுகிறார்கள். இந்த குழுவின் முதல் கூட்டம் மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகத்தில் நடைபெற்றது.

பசும்பொன் முத்து ராமலிங்கம் மாவட்டத்தில் வரதட்சணை கொடுமைகள், மாமியார் கொடுமைகள் தவிர்க்க இந்தக்குழு செயல்படும். காவல் துறையினரின் கண்காணிப்பு மட்டும் இல்லாமல் பொது மக்களின் ஒத்துழைப்பை இந்தக்குழு பெற்று சிறப்பாக செயல்படும். மூன்று மாதங்களுக்கு ஒருமுறை இக்குழுவின் கூட்டம்நடைபெறும் என்றும் மாவட்ட ஆட்சித்தலைவர் ஆர். கோபாலன் தெரிவித்துள்ளார்.

## மேட்டுப்பாளையம் நகர கழக செயலாளர் மரணம்

மேட்டுப்பாளையம், அக் 24- மேட்டுப்பாளையம் நகர கழகச் செயலாளர் டி. ரங்கசாமி உடல் நலம் குன்றி கோவையில் மரணமடைந்தார்.

சட்டமன்ற உறுப்பினர் மா. சின்னராசு ரங்கசாமியின் உடலுக்கு மலர் வளையம் வைத்துஅஞ்சலி செலுத்தினார்.

அனுதாபக் கூட்டத்தில் நகர் மன்றத்தலைவர் மா. மாதையன் மா.சின்னராசு எம்.எல்.ஏ., புலவர் சிற்றரசு டி. கே. துரைசாமி,எம்.பி ஆறுமுகம், எம்.பி. முருண் பி. எஸ். இராமலிங்கம் மீனா ஹரி ராமலிங்கம் பாண்டுரங்கன், பிரம்மன் உன்னிபாலன், தீன்முகமது, ராமச்சந்திரன் உள்பட அனைத்துக்கட்சியினரும் கலந்து கொண்டனர்.

## சார்நிலைக் கருவூலம்- இடம் மாற்றம்

சென்னை. அக். 24-
சென்னை தங்கசாலை 18-ம் எண்ணுள்ள கட்டிடத்தில் இயங்கி வந்த உதவி முத்திரைத்தாள் கண்காணிப்பாளர் பொது முத்திரைத்தாள் அலுவலகம் மற்றும் மைலாப்பூர் திருவல்லிக்கேணி சார்நிலைக் கருவூலம் ஆகியவை 27-ம் தேதி முதல்114, வெங்கட்ரங்கம் தெரு 2-வது மாடி திருவல்லிக்கேணி என்ற முகவரியில் இயங்குகிறது,

## கார்வாரில் கடற்படை தளம்

கார்வார்,அக்.24
கர்நாடக மாநிலம் கார்வாரில் 1760 கோடி ரூபாய் செலவில் கடற்படைத் தளம் அமைக்கப்படுகிறது.

இந்த கடற்படைத்தளம் சுமார் 8 ஆயிரம் ஏக்கர் நிலத்தில் அமைய உள்ளது.

கடற்படைத்தளத்திற்கான அடிக்கல்லைபிரதமர் ராஜீவ்காந்தி இன்று நாட்டுகிறார்.

# நெய்வேலியில் விரிவாக்கதிட்டங்கள்

கோவை, அக். 24-
நெல்வேலி அனல் மின் திட்ட விரிவாக்கத்துக்கும் சுரங்க விரிவாக்கத்துக்கும் மத்திய அரசு 1500 கோடி ரூபாயை ஒதுக்கீடு செய்துள்ளது.

இதுபற்றி நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன் தலைவர் எம்.பி. நாராயணன் நிருபர்களிடம் கூறியதாவது:

ஏழாவது ஐந்தாண்டு திட்டத்தில் நெய்வேலி நிலக்கரி சுரங்க மற்றும் அனல்மின் திட்ட விரிவாக்கத்துக்கு மத்திய அரசு 1500கோடிரூபாய் ஒதுக்கீடு செய்துள்ளது.

210 மெகாவாட் திறன் கொண்ட இரண்டாவது அனல் மின் பிரிவு இரண்டாவதுகட்டப்பணிஅடுத்த ஆண்டு மார்ச்சுக்குள் பூர்த்தியடையும்.

முதல் சுரங்கத்தை விரிவு செய்வதால் 4 ஆயிரம் மில்லியன் டன்பழுப்புநிலக்கரி கூடுதலாககிடைக்கும், மூன்றாவது சுரங்கம் அமைக்கவும்திட்டமிடப்பட்டுள்ளது இதன் மூலம் 11 மில்லியன் டன் கிடைக்கும்.

### பழுப்பு நிலக்கரி

லிகோ கரியின் தரத்தை மேலும் உயர்த்த தரக்கட்டுபாடு பிரிவு ஒன்று துவக்கப்படவுள்ளது.

பழுப்பு நிலக்கரி கிடைப்பதில் ஏற்படும்தாமதத்தை களைய நடவடிக்கை எடுத்து வருகிறோம்

இவ்வாறு நாராயணன் கூறினார்.

## மனைவி கள்ளக்காதல்: கணவன் தற்கொலை

சென்னை, அக். 23-
மனைவிகள்ளக் காதலனுடன்ஓடிவிட்டதால்கணவர் மனம் உடைந்து தூக்குப் போட்டு தற்கொலை செய்துகொண்டார்.

சென்னை ஜார்ஜ் டவுனைச் சேர்ந்தவர் பூபதி மாரி.வயது 28. லாரிடிரைவர், இவரது மனைவி விஜயா. 4 ஆண்டுகளுக்கு முன் இவர்களுக்குத் திருமணம் நடந்தது.

வேறு ஒருவருடன்கள்ளக் காதல் ஏற்பட்டு அவருடன் விஜயா ஓடி விட்டாராம். மனம் உடைந்த மாரி தூக்குப் போட்டு தற்கொலை செய்து கொண்டார். இதுகுறித்து போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகின்றனர்.

தமிழ் நாடு மின்சார வாரியம்

## தமிழ்நாடு மின்சார வாரியம்

எண்ணூர் அனல் மின் நிலையம்

ஒப்பந்தவிளம்பரம் கே.2 காண்ட்ராக்ட் .கீழே குறிப்பிட்டுள்ள வேலைக்காக அரசுக்கு முத்திரையிட்ட ஒப்பந்தங்கள் வரவேற்கப் படுகின்றது.

வேலை விவரங்கள்: எண்ணூர் அனல் மின் நிலையத்தில் உள்ள யூனிட் 1 முதல் 5 வரையில் இன்சுலேஷன் லேக்கிங் ஆண்டு ஷீட் கிளேடிங் (Insulation Lagging And Sheet Cladding) வேலையான பழைய இன்சுலேஷனை அகற்றி புதுபித்தலுக்கான 1986-87 வருடத்திற்கு பராமரிப்புக்கான ஒப்பந்தம்.

விபர குறிப்பு எண். எஸ்.இ.,எம்.எம். 11.

ஒப்பந்தப்பிரதியின் விலை தமிழ்நாடு மட்டும் ரூ. 50- (ரூபாய் ஐம்பது மட்டும்)

ஒப்பந்தப்பிரதியின் விலை தமிழ்நாடுதவிர்த்து வெளி மாநிலங்களுக்கு ரூ. 55- (ரூபாய் ஐம்பத்தைந்து மட்டும்)

வைப்புத் தொகை ரூ. 1650- (ரூபாய் ஆயிரத்து அறுநூற்று ஐம்பது மட்டும்)

ஒப்பந்தம் பெற்றுக் கொள்ளும் கடைசி தேதி 12-11-86 பகல் 12.00 மணி.

டெண்டர் படிவங்கள் வேண்டுவோர் அந்தந்த வேலைக்கு எதிராக குறிப்பிட்ட தொகையைப் பண அஞ்சல்(மணிஆர்டர்) மூலமாகவோ அல்லது நேரிலோ விளக்க விவர எண்ணையும் சுய முகவரியையும் தெளிவாகக் குறிப்பிட்டு கணக்கு அலுவலர் இயக்குதல் வட்டம் (எ.ஓ.) எண்ணூர் அனல் மின் நிலையம் எண்ணூர் சென்னை-600057 என்ற முகவரியில் செலுத்தி அவர் அலுவலகத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம். அஞ்சல் மூலம் அனுப்பப்படும் டெண்டர் படிவங்கள் உரியவர்கட்குச் சேராவிட்டாலோ, தாமதமாகபோய் சேர்ந்தாலோ அதற்கு மின்சார வாரியம்பொறுப்பல்ல. தமிழ்நாடு மின்சார வாரியத்தின் டெண்டர் படிவங்களில் சமர்பிக்க பெறாத டெண்டர்களும், மேற்குறிப்பிட்ட நாள் நேரத்திற்குள் சமர்ப்பிக்க பெறாத டெண்டர்களும் திறக்கப்படமாட்டாது.

டெண்டர் படிவங்கள் திறக்கப்படும் நாள் அன்று விற்பனைசெய்யப்படமாட்டாது. சமர்பிக்கப்பட்ட டெண்டர்களை சம்பந்தப்பட்ட டெண்டர்களில் வந்தவர்கள் முன்னிலையில் பகல் 3.00மணிக்கு திறக்கப்படும். டெண்டர் ஏற்கும் அதிகாரி எந்த ஒருடெண்டரையோ அல்லது எல்லா டெண்டர்களையும் பிரிக்கவோ அல்லது எவ்வித காரணமும் காட்டாது நிராகரிக்கவோ உரிமை பெற்றவராவர்.

டெண்டர்தாரர்கள் வைப்புத்தொகையை குறிபிட்ட தேதியில் காலை 11 மணிக்குள் செலுத்திடவேண்டும்

மேற்பார்வை பொறியாளர்
இயந்திர சீரமைப்பு
எண்ணூர் அனல்மின் நிலையம்
எண்ணூர் சென்னை 57

DIPR Ro No.7- CGT-86-MAC

# தபால்நிலையசேமிப்பு வங்கி ஊக்கப் பரிசுத் திட்டம்

இந்திய அரசு, 1973-ல் அறிமுகம் செய்த தபால் நிலைய சேமிப்பு வங்கி ஊக்கப் பரிசுத் திட்டத்தை, 1986 அக்டோபர் 1-ஆம் தேதியிலிருந்து நிறுத்திவிட தீர்மானித்துள்ளது. அதாவது, தபால் நிலைய சேமிப்புக் கணக்குகளுக்காக அக்டோபர் 1986-லிருந்து மார்ச் 1987 வரையான கால கட்டத்திற்கும் அதற்குப் பிந்திய கால கட்டத்திற்கும், ஊக்கப் பரிசுக் குலுக்கல் நடைபெறாது. இருப்பினும், ஏப்ரல் 1986-லிருந்து செப்டம்பர் 1986 வரையான கால கட்டத்தில், குறைந்தபட்சம் ரூபாய் 200-ஐ தொடர்ந்து இருப்பில் கொண்டிருக்கும் கணக்குகளுக்காக ஜனவரி 1987 இறுதியில் குலுக்கல் ஒன்று நடைபெறும்.

தேசிய சேமிப்பு நிறுவனம்
(இந்திய அரசு நிதி அமைச்சகம்)
நாக்பூர் - 6

86, 284 TAM

# பொதுப் பணித் துறை

கிருஷ்ணா குடிநீர் சப்ளை திட்ட வட்டம், சேப்பாக்கம்' சென்னை-600005.
டெண்டர் அறிவிப்பு எண். 6-86
தேதி 16-10-86

## ஒப்பந்த விவரம்: மோத்த தோகை

தமிழ்நாடு அரசு ஆளுநர் அவர்கள் சார்பில் அவர்களுக்காக, கீழ்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்டடெண்டர்கள், பொதுப் பணித் துறையின் பதிவு பெற்ற காண்ட்ராக்டர்களிடமிருந்து, கண்காணிப்புப் பொறியாளர் பொதுப் பணித்துறை கிருஷ்ணாகுடிநீர் சப்ளை திட்டவட்டம்;சேப்பாக்கம்' சென்னை-5 அவர்களால் 26-11-86 பிற்பகல் 3 மணி வரை பெற்றுக்கொள்ளப்பட்டு அதேதினம் பிற்பகல் 3.30 மணிக்கு கீழ் கையொப்பமிட்டவரால் திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | டேவணித் தொகை டெபாஸிட் | முடிக்கப்பட வேண்டிய காலம் |
|---|---|---|---|
| 1. | பூண்டி நீர் தேக்கத்தின் கீழ் புற கால்வாயின் இடது வெள்ளத்தடுப்பு கரைக்கு அபிவிருத்தி செய்தல். | ரூ. 5,000- | 6 மாதம் (ஆறுமாதங்கள்) |
| 2. | தமிழ்நாடு எல்லையிலிருந்துபூண்டி நீர் தேக்கத்திற்கு செல்லும் கால் வாயின் LS-1400Mல் சிறப்பு வழி (SUPER PASSAGE)Cumbriage கட்டுதல் (பாக்கி வேலைகள்) | ரூ. 6,700- | 9 மாதம் (ஒன்பது மாதங்கள்) |

டெண்டர் பத்திரங்கள் விலை: இனம் 1; ரூபாய் 75/+விற்பனைவரி & சர்சார்ஜ் ரூபாய் 4.50

இனம் 2; ரூபாய் 100/+ விற்பனைவரி & சர்சார்ஜ் ரூபாய் 5.50

டிவிஷன்
இனம் 1; செயற்பொறியாளர், கிருஷ்ணா குடிநீர் சப்ளை திட்டம் டிவிஷன் சென்னை-5

இனம் 2;செயற்பொறியாளர், கிருஷ்ணா குடிநீர் சப்ளை திட்டம் டிவிஷன் II திருவள்ளூர்.

பதிவு பெற்ற வகுப்பு II வது வகுப்பு

மேலேகுறிப்பிட்டுள்ளபடி,டெண்டர் பத்திரங்களுக்கான விலை மற்றும் விற்பனை வரித் தொகையை (எக்காரணத்தை முன்னிட்டும் திருப்பியளிக்கப்படமாட்டாது) தனித்தனி சலான்கள் மூலம் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவிலோ அல்லது அரசு கருவூலத்திலோ, இனம் 1க்கு செயற்பொறியாளர், பொ. ப. து., கிருஷ்ணா குடிநீர் சப்ளை திட்ட டிவிஷன் எண் I, அவர்கள் சார்பிலும் இனம் 2க்கு செயற்பொறியாளர், கிருஷ்ணா குடிநீர் சப்ளை திட்ட டிவிஷன் எண் II அவர்கள் சார்பிலும் "882 - Cash remittances and adjustments P. W. III O. R. (D. P. Code No: 0882 RARAD 0000) என்ற தலைப்பிலும் விற்பனைவரிக்கான தொகையை" 040 salesreceipt under the S.T.act General S.T.C,D.P,Code 040-A-ABAA 0518)என்ற தலைப்பிலும் செலுத்த வேண்டும்.

எவ்விதக்காரணமும் காட்டாமல்எந்த ஒருடெண்டரையோ அல்லது எல்லா டெண்டர்களையுமே நிராகரிக்க கண்காணிப்புப் பொறியாளர், கிருஷ்ணா குடிநீர் சப்ளை திட்டவட்டம்,சென்னை-6 அவர்கள் பூரண உரிமை பெற்றவராவார் டெண்டர் பத்திரங்கள் மற்றும் இதர விவரங்கள் ஆகியவை, கண்காணிப்பு பொறியாளர், கிருஷ்ணா குடிநீர் சப்ளை திட்ட வட்டம், சென்னை-5 அவர்களிடமிருந்து 10-11-86 முதல் 21-11-86 வரை எல்லா அலுவலக நாட்களிலும் அலுவலக நேரங்களில் பெற்றுக் கொள்ளலாம்.

கண்காணிப்புப் பொறியாளர்

Dipr - Ro 2- CGT-86-MAC

Edited and published by K.RAVINDRAN on behalf of Thangamani publications and printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust press 34 Nelson Manickam Road, MADRAS 600 029.